[10th November 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) Yes, Sir. A petition from the resident of 22, Nanjundapuram village containing allegations of misappropriation of panchayat funds by the president of that panchayat was received by the Collector of Coimbatore.

(இ) The matter is being enquired into by the Divisional Panchayat Officer, Coimbatore and further action will be taken by the Collector of Coimbatore as soon as the report from the Divisional Panchayat Officer is received.

SRI N. MARUDACHALAM : ஸார், இந்த பஞ்சாயத்துக்களிலே வருஷா வருஷம் கணக்கு தணிக்கை செய்யப்படுகிறதா ? அப்படி தணிக்கை செய்யப்பட்டு இந்தக் கையாடல் கண்டுபிடிக்கப்பட்டதா ? அப்படி பணம் கையாடல் செய்த இந்த பஞ்சாயத்துத் தலைவர் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்று அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதுதான் இப்போது விசாரணையில் இருக்கிறது என்று சொன்னேன். அந்த விசாரணையின் முடிவு தெரிந்த பிற்பாடு, கலெக்டர் அதற்கான தக்க நடவடிக்கைகள் எடுப்பார்கள்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : ஸார், இந்த பஞ்சாயத்து போர்டிலே சேலம் தாலூகாவிலே, உதாரணத்திற்கு இதைச் சொல்கிறேன், ஒரு இடத்தில் பணம் கையாடல் செய்யப்பட்டதில் விசாரணை நடப்பதற்கு 3 ஆண்டுகள், 4 ஆண்டுகள் என்று மிகவும் காலம் கடந்து விடுவதால், ரொம்பவும் பஞ்சாயத்துக்கள் மீது மக்களுக்கு வெறுப்பு ஏற்படுகிறது. அதனாலே ஊழல்கள் நடந்தால், துரிதமாக நடவடிக்கைகள் எடுப்பதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போது ஏற்படுத்தப்பட்டுள்ள புதிய சட்டத்தின்படி உடனடியாக நடவடிக்கைகள் எடுப்பதற்கு நாம் ஏற்பாடு செய்திருக்கிறோம். அதன்படி நடவடிக்கைகள் எடுக்கப்படும்.

* 1984 *Q.*—SRI P. S. SANTHANAM : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருவண்ணாமலை தாலூகாவில் உள்ள கீழ் நாஞ்சப்பட்டு கிராம பஞ்சாயத்து போர்டு நிர்வாகம் சரியாக நடக்கவில்லை என்றும், போர்டு தலைவர் பஞ்சாயத்து நிதியிலிருந்து சுமார் 4,000 ரூபாயை கையாடிவிட்டார் என்றும் புகார் பஞ்சாயத்து போர்டு மெம்பர்கள் மூலம் வந்துள்ளனவா ?

(இ) அப்படியானால் அதன்பேரில் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) Yes Sir. One such petition has been received by the Collector of North Arcot.

10th November 1961]

(இ) The allegations have been enquired into by the Collector of North Arcot and he as the officer appointed to exercise the powers vested in the Inspector in respect of panchayats will take necessary action against the president for the irregularities committed by him.

SRI P. S. SANTHANAM : தலைவர் அவர்களே, இந்த பஞ்சாயத்து போர்டு தலைவர்கள் கையாடல் செய்கின்ற குற்றச் சாட்டினால், கிராமத்திலே நடைபெறுகின்ற வேலைகள் மிகவும் தாமதப்படுகின்ற காரணத்தாலே, இந்த கையாடல் செய்கின்ற வர்கள் மீது வேலை தாமதப்படுவதனால் ஏற்படுகின்ற நஷ்டத் தொகையையும் வசூலிப்பதற்கு தக்க நடவடிக்கைகள் எடுக்க சர்க்கார் உத்திரவு இடுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : எந்தெந்த முறைகளில் வசூலிக்கலாமோ, அந்தந்த வகைகளில் வசூலிக்கப்படும். அவரிடத்தில் சொத்தே இல்லையென்றால், எப்படி வசூல் செய்வது ? அப்போது அப்படிப்பட்ட பஞ்சாயத்துத் தலைவரை தேர்ந்தெடுத் தவர்களைத்தான் குறை சொல்ல வேண்டும்.

* 1985 *Q.*—SRI P. U. SHANMUGAM : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) திருவண்ணாமலை தாலூக்காவில் எந்தெந்த ஊராட்சி மன்றங்களிலிருந்து பண மோசடி சம்பந்தமான விசாரணை நடத்த புத்தகங்களை பஞ்சாயத்து அதிகாரிகள் பறிமுதல் செய்தார்கள்?

(இ) எந்தெந்த கிராமங்கள் ?

(உ) விசாரணை என்ன ஆயிற்று ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) & (இ) In the following four panchayats in Tiruvannamalai taluk of the North Arcot district, the Inspecting Officers have noticed defalcation of accounts and misappropriation of funds—

(1) Andampallam.
(2) Vaipur.
(3) Kilnachipattu.
(4) Vettavalam.

(உ) In Andampallam panchayat, the president was found guilty and fined Rs. 600 by the Additional First-class Magistrate, Vellore.

The Collector of North Arcot is pursuing action against the president of Vaipur panchayat.

In the case of Kilnachipattu and Vettavalam panchayats the Divisional Panchayat Officer, Tiruvannamalai, is conducting an enquiry and the Collector will take suitable action on receipt of the report of enquiry.